உ

சிவமயம்.

# சிவக்ஷேத்திர

# யாத்திரானுகூலம்.

ஆர்மள்கி,

ஸ்ரீமான், கரு. சே. சு.

## செல்லப்பசெட்டியார்

அவர்கள் முயற்சியால்,

சாலியமங்கலம்

## மு. சாம்பசிவ நாயனார்

இயற்றி,

சென்னை:—

மகாலட்சுமி விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கலாயிற்று.



விலை அணா 10.

1903.

சிவமயம்.

# முகவுரை.

—:0:—

கடல்புடை சூழ்ந்த நிலவுலகின்கண் ஸ்ரீ கண்ட சரீர சரீரியாய் விளங்கும் சிவபெருமான், அநாதி மல முத்த பதியாகிய தமக்கு யாதொரு பிரயோசனமுங் குறியாது அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்களுக்கு மல நீக்கமும் சிவத்துவ விளக்கமும் சித்திக்கும் பொருட்டுத் தமது திருப்பெருங்கருணை மிகுதியினாலே திருவருளே திருமேனியாக அங்கிங்கெனாதபடி எங்கும்வியாபகமாய் நிற்பினும் புறத்திலே திருக்கோயிலுள்ளிருக்கும் சிவலிங்கமுதலிய திருமேனியை யாதாரமாகக்கொண்டு, தயிரில் நெய்போல விளங்கா நிற்கும் சிவதலங்கள் பலவுள. அவைகளுள், பரசமயத்தருக்கொழியவும் வைதிக மார்க்கமும் சைவமார்க்கமும் தழைத்தோங்கவும் எம்மொழிகளினும் தமிழ் மொழியே உயர்ச்சியடையவும் தமிழ் நாடுசிறக்கவும் இத்தமிழ் நாட்டின்கண் அவதரித்த சமயகுரவரால் தேவாரத் திருப்பதிகங்கள் பெற்று விளங்காநின்ற தலங்கள் 274-ம், அத்தேவார வைப்புத்தலங்கள் 249-ம், உள்ளன. அவற்றை "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்ற ஆன்றோர்வாக்கியத்தை குருவாக்காய்க்கொண்டு யாத்திரை செய்வதே எத்தகைப் பத்திமார்க்கங்களினும் மேம்பட்டதெனக்கருதி யாத்திரை செய்தொழுகும் சிவநேசச் செல்வர்களுக்குப் பேருதவியாயிருக்கும் பொருட்டு, தலங்கள் ஒவ்வொன்றும் இருக்குமிடம் திசைதூரம் முதலியகாட்டி "சிவக்ஷேத்திர விளக்கம்" "சிவ க்ஷேத்திரமான்மியசங்கிரகம்" "சிவதல மான்மியச்சுருக்கம்" என்னும் பலநாமங்களால் பலர் பல புத்தகங்கள் வெளியிட்டிருக்கின்றனர்,

அங்ஙனம் வெளிவந்த நூல்கள் நிரம்பிய பயனுள வேயாயினும், அவைகள் இக்காலவியற்கைக்கேற்ப் புகைரத (ரயில்வே) மார்க்கங்கள் முதலியன கூறப்படாமையான் அவைகளுடன் இதுவும் சேர்ந்திருப்பின் மிக்கபயனுடைத்தா மெனக்கருதியே, யான் யாத்திரை செய்தும், செய்தோரை வினவியும், தெரிந்தவைகளைக்கொண்டு இந்நூல் எழுதத்துணிந்தேன். இதற்கு வேண்டிய அங்கங்களின் ஒன்றாகிய அவ்வத்தல மான்மியங்களிற் பல சரிவரக் கிடைக்காமையின், அவற்றைப் பிற்பகுதியால் வெளியிடநிறுத்தி, இம்முற்பகுதியில் மார்க்கங்களைமட்டும் "சிவ க்ஷேத்திர யாத்திரானுகூலம்" என்றபெயரான் வெளியிட்டிருக்கின்றேன்.

இத்துணைப்பெருங்காரியத்தைச் செய்து முடிக்கும் பேரறிவுடையனல்லேனாயினும் இதின் விஷயமாய் எழுதவேண்டுமென்னும் எனது மனவெழுச்சியாலும், ஸ்ரீமான். கரு. செ. சு.செல்லப்பசெட்டியார் அவர்களது இடைவிடாத தூண்டுதலினாலும் ஒருவாறு துணிந்தேனாதலான், இதன் கண்ணுள்ள குற்றங் குறைகளைக் கருதாது மன்னித்தருள சிவநேசச்செல்வர்கள் யாவரையும மனோ வாக்குக் காயங்களால் பிரார்த்திக்கின்றேன்.

இதிலுள்ள தவறுதல்களைத் தெரிவிப்பின் அவைகளை நீக்கியும்; பின்னுள்ள மாறுதல்களையும், தலமான்மியம் முதலியவைகளையும், சேர்த்தும், புதுக்கி; அதிசீக்கிரத்தில் 2-ம், பகுதியில் வெளியிடக்கருதி முயன்று வருவதைத்,திருவருள் கூட்டி முடிக்கப்பிரார்த்திக்கின்றேன்.

இம்முயற்சிக்குப் பேருதவி செய்துவந்த மாரியம்மன் கோயில் "யாத்திரைவாசி" முத்துசாமிக்கு நாளும் நன்றியுள்ளவனாகின்றேன்.

சோபகிருது௵
சிம்மரவி.
சாலியமங்கலம்.

இங்ஙனம்,
 மு. சாம்பசிவன்.
அடியார்க் கடியேன்

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

திருக்கைலாய பரம்பரை,

அன்னப்பன்பேட்டையாதீனத்து

மஹாசந்நிதானம்

ஸ்ரீ. குரு. சபாபதித்தாயுமான பண்டாரச் சந்நிதிகள்

திருவாய்மலர்ந் தருளியது.

—:o:—

முத்திநெறிக் கேதுதலந் தீர்த்த மூர்த்தி
மூன்றுமென முன்னோர்கண் மொழிந்த வாற்றாற்
பத்திநெறி யாளரெலாங் களிக்கும் வண்ணம்
பாற்கடலா னயன்பரவு பாசு பாணி
யித்தரையிற் றனையுருவ மூன்றி னொன்றாற்
றெழுந்தருள்செய் தலம்பலவா மவற்று ளெம்மை
சித்தமகிழ் வுடனளித்த மேலைப்பா லுண்ட
செம்மலார் முதன்மூவர் செப்பு பாடல். க

பெற்றதலஞ் சேர்வதற்குக் கண்டு வந்த
பெரியதுணை யெனச்சேமஞ் செய்ய மன்னு
னுற்றமறை பொருள்காட்டுஞ் சனமே யென்ன
வுவந்தவ்வத் தலத்துறைவா ரெதிரே கண்டு
பற்றியழைத் துடனேகும் பான்மை யென்னப்
பாவிக்கும் படியாத்தி ரானு கூலங்
கற்றியங்கச் செய்துகொடுத் தனன் கைம்மாறு
கருதாத மேகமென வவன்பார்க் கண்ணே. உ

எண்டிசையு நிறைந்தண்டந் தகர்த்தப் பாலு
மேறுபுகழ்ச் சாலியமங் கலத்து வாழ்வான்
வண்டிசையார் பூங்குவளை யலங்கற் றோளான்
வைதீக சைவநெறி யியங்குந் தாளான்
கண்டிசையா லொருமுதலை யாவ ரானுங்
கண்டுதொழு தேசெல்வ மனைசேர் கையான்
மண்டியமா சகற்றுதிரு வேடத் தன்பின்
மாண்புடையான் சாம்பசிவ நாமன் மாதோ. ௩



சாமியமங்கலத்தில் வசித்திருக்கும்

கும்பகோணம்

பிரம்மஸ்ரீ. சு. நடேசய்யர் அவர்கள்

இயற்றிய,

சட்டளைக்கலித்துறை.

பார்கொண்ட சீர்த்திரம் பாண்டித் துரைத்தேவர் பாரகத்திற்
சீர்கொண்ட கூடலி னான்காந் தமிழ்ச்சங்கஞ் சேர்த்தியநாள்
பேர்கொண்ட மூவர் தமிழ்கொணர் தியாந்த பெரும்புகழார்
ஆர்கொண்ட வேணி யரனார் தலங்கட் கணியெனவே. (க)

கருவள ரார்க்கொரு மாநிதி யென்னவுங் காசினியிற்
றிருவளர் சேத்திர யாத்திரா னுகூலஞ்செய் தான்றெளிவுண்
மருவள வில்புகழ் மாமுத்துச் சாமிசெய் மாதவமே
உருவளர்ந் தன்னவன் சாம்ப சிவப்பெய ருத்தமனே. (உ)

தஞ்சை K. H. ஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்,

தஞ்சைத் தமிழ்க்கலாசாலைத்தலைமைப்பண்டிதருமாகிய

பிரம்மஸ்ரீ முத்துஸ்வாமி ஐயரவர்களியற்றிய,

நேரிசை யாசிரியப்பா.

திருவளர் கின்ற செழியகல் லாலின்
றருநிழ லமர்ந்து சராசர மனைத்தும்
புரந்தருள் புங்கவன் புனலொடு கொன்றை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தின்

றண்ணரு ளுடைத் தலந்தொறுஞ் சென்று
பண்ணுறப் பாடிப் பரவிய மூவரு
மைய னருள்பெற வகிலத் தோங்கிது
துய்ய நெறியெனத் தொகுத்துக் காட்டின
ரன்னவர் புகழ்ந்த வரன்றிருப் பதிக
மின்ன சதுற்குற விதுநெறி யென்ன
முன்னர்ப் பாணடியர் நிறீஇய மூன்றொடு
நன்னிலை கொண்டோயிர் நான்காஞ் சங்கமா
மனையேன் பாண்டித் துரைநிறீஇ மதுரையில்
நன்னர்ச் சங்க நடைபெறு மிந்நாட்
பலக்கடல் கடந்து பாரின் மானவர்
சிவசெழுஞ் சுடரின் றிருவருள் பெறுவா
றுவப்புட னொருநூ லுயர்தமிழ் நடையாற்
சிவக்ஷேத் திரயாத் திரானுகூ லமென
வளமுறத் தக்கதில் வகுத்துக் காட்டினன்
குளவுறு வாளை குதிகொளத் தெங்கின்
மடலவிழ்ந் தொழுகு மதுமழை தன்னாற்
றடவயற் செழிக்குஞ் சாலிய மங்கலத்
தழைத்தவன் முத்துச் சாமி நாயக
ரிழைத்த மாதவ மெழில்பெற வந்தோன்
சிவனடித் துணையே சிந்தனை செய்பவ
னவனடி யார்தமக் கடியவன் செந்தமிழ்ப்
புணரியை யறிவெனும் புணைபாற் கடந்தொருங்
குணர்ந்தவ னியாரு முவந்திடத் தக்கோன்
சாம்ப சிவப்பெயர் தழைத்த
மேம்படு சைவத் தோங்குவித் தகனே.

—.o:—

தஞ்சைமாநகரம் மகா வித்வான்

ஸ்ரீலஸ்ரீ

## மதுரை முத்து உபாத்தியாயர் அவர்கள்

மாணாக்கரொருவரும்

சாலிடமங்கலம்

பிராஞ்சு போஸ்டுமாஸ்டருமாகிய

ம-ா-ா-ஸ்ரீ,

## து. வீ. கோபாலசாமி நாயுடு அவர்கள்

இயற்றியது.

---

## விருத்தம்.

சாத்திரம் பகர்ந்த தன்றித் தன்னிலைத் தரிசென் றீசன்
றோத்திரம் புரியக் காணாத் தொல்லடி யவர்க்கு ஞான
நேத்திர மீதே யென்ன நிலவிடப் பலவாஞ் சைவ
சேத்திர யாத்தி ரானு கூலமென் றொருபேர் செப்பி. (1)

சேடனிற் புலமை சார்பாண் டித்துரைத் தேவர் கோமான்
கூடலி னான்காம் சங்கங் கூட்டிமுத் தமிழ்காக் கும்மின்
னாடனிற் சிறப்பின் மிக்க நாட்டரி மளத்திற் செல்வ
நீடுசெல் லப்ப நல்லோ னேரிய முயற்சி தன்னால். (2)

இப்பெரு வசன நன்னூ லியற்றின னெளிதின் யார்க்கும்
கைப்படு நெல்லி யங்கைக் கனியெனக் கண்டு சொன்ன
தப்பரு நெறிசென் றீசன் றாடொழு மடியார் வாழ்த்தச்
செப்பருங் குணஞ்சேர் சாம்ப சிவப்பெயர்த் திருவி னானே. (3)

ஆரண மாமி தென்கோ வப்பெரு மறையுங் காணாக்
காரணன் றன்னைக் காட்டுங் கலைக்குரு பீட மென்கோ
நாரணன் மருகிக் கான்ற நல்லணி யென்கோ சென்னி
நீரணை னடியார்க் கின்றி நிகழ்கிலா நிதிய மாமால். (4)

---

உ

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக் கோவை.



கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை
குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை
வாயில்கலிக் காமூர்சாய்க் காடுதிருப் பல்ல
வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி
தாயிலான் குருகாவூர் காழிகோலக்கா
தருக்கிளர்புள் ளிருக்குவே ளூர்கண்ணார் கோயின்
ஞாயிலியற் கடைமுடியே நின்றியூர் புன்கூர்
நாடியநீ ரேன்னி யூர்வேள்விக் குடியே. (௧)

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் குறுக்கை
கருப்பறிய லூர்கதியே காட்டுசேரக் குக்கா
மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிப் படிக்கரையே
வளருவோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர்
திருநாரை யூர்கடம்பூர் பந்தணைநல் லூர்பொன்
றிகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே
திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து
தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. (௨)

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை
யியல்வைகா வூர்நல்வட குரங்காடு துறையே
பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம்
பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூர்
அன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே
யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராம
மன்னுமீங் கோய்மலையி ரேட்டுறுபான் மூன்றே
வட்கரையிற் பதிதென்பால் வாட்போக்கி யாமே. (௩)

கடம்பந்துறை திருப்பராய்த் துறைகற்குடிமூக் கீச்சரங்
கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே

நெடுங்களமே லைக்காட்டுப் பள்ளியாலம் பொழில்சேர்
நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமா
லடும்வேதி குடிதென்குடித் திட்டைபுள்ள மங்கை
யணியார்சக் கரப்பள்ளி யருங்கருகா வூரே
படர்பாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனிற்
பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச்சரமே. (௪)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக்
கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணநா கேச்சரங்
கூறுமிடை மருதகுரங் காடுதுறை நீலக்
குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழம்பம்
சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு வழுந்தூர்
சகம்புகழ்மா யூரம்விள நகர்பறிய லூரே
வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே
வியன்றலைச்சங் காடாக்கூர் விளங்குகட வூரே. (௫)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே
தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டா
றுரைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயின்மா காள
முயர்மீயச் சூரிளங்கோ யிறிலதைப் பதிபூ
மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை
வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென்
கருத்தடைக்கு நறையூர்ச்சித் தீச்சரந் தோடரிசிற்
கரைப்புத்தூர் சிவபுரமுங் கலையநல்லூர் காணே. (௬)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில்
கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூர்.
இருக்கும்வர்த்த மானேச்சர மிராமனதீச் சரமே
மியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக லிருளே
முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா ரோண
முன்றிருச்சிக்க றிருக்கீழ் வேளூர்தே வூரே
அரிக்கரியான் பள்ளியின்முக் கூடறிரு வாரூ
ரரநெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. (௭)

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர்
மிளிர்தலைபா லங்காடு குடவாயில் சேறை
நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர்
நவிலுமிரும் பூளை திரு வரதைப்பெரும் பாழி
மாலூரு மவளிவணல் லூர்பருதி நியமம்
வாழ்வெண்ணி பூவனூர் பாதாளீச் சரநீர்ச்
சேலூருந் திருக்களர்சிற் றேமமுசாத் தானந்
திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே (௮)

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே
தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு
கண்டெருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்தான் குடியே
காறாயில் கன்றாப்பூர் வலிவலங்கைச் சினத்தோ
டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் மறைக்கா
டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென் கரையில்
எண்டருநூற் றிருபத்தே ழிப்பாலீ ழத்தில்
இசைகோணை மாமலைகே தீச்சரமென் றிரண்டே (௯)

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ
டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலினோ
டேலுமிரா மேச்சரமா டானைகா னப்பே
ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாலம்
பாலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டி
பதினான்கு மலைநாட்டி லஞ்சைக்கள மொன்றே
சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி
திருநணா கொடிமாடச் செங்குன்றூர் தானே. (௧௦)

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின்
மேவுமே ழரத்துறைவண் ணேங்கானை மாடம்
எஞ்சலில் கூடலையாற்றூ ரெருக்கத்தம் புலியூ
ரிணையகலுந் திணைநகர்சோ புரமதிகை புகழே
விஞ்சதிரு நாவலூர் முதுகுன்றந் திருநெல்
வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல் லூரே

மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய் நல்லூர் துறையூர்
வடுகூர்வீ டேயருளுந் திருமாணி குழியே. (கக)

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச்
சரம்புறவார் பனங்காட்டூர் திருவாமாத் தூரே
எண்ணாரண் ணுமலையு நடுநாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண்
கண்ணேங்கு மதிலோண காந்தன்றளி யனேக
தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே
உண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத்
தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே. (கஉ)

ஊறலிலம் பயங்கோட்டூர் விற்கோல மாலங்கா
டியர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில் காளத்தி
மாறிறிரு வொற்றியூர் வலிதாயம் பாலி
வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை
ஈறிறிரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைச்சுரங் கழுக்குன்றமச்சிறுபாக் கம்மே
மாறிறிரு வக்கரையே யரசிலிதொல் லிரும்பை
மாகாளந் தொண்டைநன்னாட் டெண்ணின்முப்பா னிரண் [டே (கரு)

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற்
குலவுபருப் பதமலை பருப்பதமம் பிகைதன்
பாகருறை யனேகதங்கா வதந்திருக்கே தாரம்
பகர்நொடித்தான் மலைவடக்கிற் பதினைந்தே யிவற்றோ
டாகவிரு நூற்றெழுபா னென்கென்பர் மூவ
ரருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப்புத்
தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள்
சாராவாம் பிறப்பகலுஞ் சத்தியமுத் தியுமே. (கச)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவக்ஷேத்திர

# யாத்திராநுகூலம்.

காப்பு.

நேரிசை வெண்பா.

ஒன்றாறி யோரெழுபத் தொன்றீராய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சாமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சாமுகனே காப்பு.

---

இப்போதுள்ள தேவாரத் திருப்பதிகங்களை உடையன வாயிருக்கின்ற சிவஸ்தலங்கள் இருநூற்றெழுபத்து நான்கில், சோழநாட்டிலே உள்ள தலங்கள் நூற்றித்தொண்ணூறுக்கும் செல்லும் மார்க்கம் வருமாறு:—

---

சென்னபட்டணத்திலிருந்து தென்மேற்கே தூத்துகுடிக் குப்போகிற தென்இந்தியா ரயில்வேத்தொடரில், விழுப்புரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், மாயூரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும் உள்ள ரயில்வே.

## சிதம்பரம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலைமார்க்கமாய் முக்கால் மைலில் 1-கோயில் என்ற சிதம்பரம் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 2-திருவேட்களம் என்ற மூங்கில் வனமும், இதினின்று

தெற்கே மட்சாலை மார்க்கமாய் அரை மைலில் 3-திருநெல்வாயில் என்ற சிவபுரியும், இதினின்று தெற்கே கால் மைலில் 4-கழிப்பாலை என்ற ஆலயம் இப்போது அமைந்திருக்கின்றதும் இருக்கின்றன.

குறிப்பு:— 4-கழிப்பாலை ஆலயம் முன் கொள்ளிடம் வடகரையில் காரைமேடு என்ற இடத்திலிருந்து ஆறுகொண்டு விட்டபடியால் இப்போது சிவபுரியில் அமைந்திருக்கின்றது. சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 10-மைலில் (வைத்தீசுவரன் கோயில் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 33-திரு நாரையூர் இருக்கின்றது. நடுநாட்டிலுள்ள 217-திருக்கூடலையாற்றூர் முதலிய தலங்களுக்குச் செல்லும் மார்க்கம் பின்னர் இருக்கின்றது.

## கொள்ளிடம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலைமார்க்கமாய் 3-மைலில் 5-திருப்பெருமணம் என்ற ஆச்சாபுரமும், இதன் வடகிழக்கே மட்சாலைமார்க்கமாய் 4-மைலில் 6-திருமயேந்திரப் பள்ளி என்ற கோயிலடிப்பாளையமும் இருக்கின்றன.

குறிப்பு:—6-திருமயேந்திரப்பள்ளி என்ற கோயிலடிப்பாளையத்திலிருந்து தெற்கே கரைமார்க்கமாய் 7-மைலில் (சீகாழி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 7-திருமுல்லைவாயில் இருக்கிறது.

## சீகாழி ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் முக்கால் மைலில் 14-சீகாழியும், இதினின்று மேற்கே மட்சாலைமார்க்கமாய் முக்கால்மைலில் 15-திருக்கோலக்கா என்ற திருத்தாளமுடையார் கோயிலும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே திருமுல்லைவாயில் கற்சாலை மார்க்கத்தில் 3-மைலிலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் அரை மைலில் 18-திருக்குருகாவூரும், இதினின்று கிழக்கே கற்சா

லை மார்க்கமாய் 5 - மைலில் 7-திருமுல்லைவாயிலு மிருக்கின்றன.

குறிப்பு:— 7-திருமுல்லைவாயிலிலிருந்து, வடக்கே கரை மார்க்கமாய் 7-மைலில் (கொள்ளிடம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 6-திருமயேந்திரப்பள்ளி என்ற கோயிலடிப்பாளையமும் தெற்கே கரைமார்க்கமாய் 5-மைலில் (மார்க்கத்தில் உப்பனாறு கடந்து செல்லவேண்டியதாதலால் சங்கடமாயிருக்கும்) மாயூரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 8-திருக்கலிக்காமூர் என்ற அன்னப்பன்பேட்டையு மிருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து, தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் (மாயூரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 11-திருவெண்காடு இருக்கின்றது.

## வைத்தீசுவரன்கோயில் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலைமார்க்கமாய் அரை மைலில் 16-திருப்புள்ளிருக்கு வேளூர் என்ற வைத்தீசுவரன்கோயில் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து மேற்கே மட்சாலைமார்க்கமாய் ஒன்றேமுக்கால் மைலில் 20-திருப்புன்கூரும், இதன் மேற்கே மட்சாலைமார்க்கமாய் 2-மைலிலுள்ள மண்ணிப்பள்ளத்தினின்று வடக்கே மட்சாலை மார்க்கமாய் முக்கால் மைலில் 27-திருக்கருப்பறியலூர் என்ற (மேலைக்காழி) தலை ஞாயிறும், இதன் வடக்கே மட்சாலைமார்க்கமாய் முக்கால்மைலில் (ஆற்றுக்குப்பரிசு) 28-திருக் குரக்குக்காவும் இருக்கின்றன. மேற்கண்ட மண்ணிப்பள்ளத்தினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றேகால் மைலில் 29-திருவாளொளிப்புற்றூர் என்ற வாளப்புற்றூரும், இதினின்று மேற்கே மட்சாலைமார்க்கமாய் ஒரு மைலில் 30-திருமண்ணிப்படிக்கரை என்ற இலுப்பைப்பட்டும், இதினின்று வடமேற்கே 2-மைலில் கொள்ளிடம் வடகரையில் (ஆற்றுக்குப்பரிசு) 31-திரு ஓமாம்புலியூரும், இதிலிருந்து கிழக்கே கொள்ளிடம் வடகரை மட்சாலைமார்க்கமாய் 3-மைலில் 32-திருக்கானாட்டு முள்ளூரும் இருக்கின்றன. 31-திருவோமாம்புலியூரிலிருந்து வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் 34-திருக்கடம்

பூர் என்ற மேலக்கடம்பூரும் இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 8 மைலில் 33-திருநாரையூரும் இருக்கின்றன.

குறிப்பு:— வைத்தீசுவரன் கோயில் ஸ்டேஷனிலிருந்து மாயூரத்திற்குப் போகிற மட்சாலையில் 3-மைலிலுள்ள கதிராமங்கலம் மார்க்கமாய் கிழக்கே அரைமைலில் (ஆனைதாண்டபுரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 17-திருக்கண்ணார் கோயில் என்ற குறுமாணக்குடி யிருக்கின்றது. 20-திருப்புன்கூரிலிருந்து, வடக்கே கரை மார்க்கமாய் ஒருமைலில் (ஏயர்கோன் கலிக்காம நாயனார் இருந்த தலமாகிய) திருப்பெருமங்கலமும் தெற்கே கரைமார்க்கமாய் ஒரு மைலில் (திருநாளைப்போவார் நாயனார் (நந்தனார்) இருந்த தலமாகிய) ஆதனூரும் இருக்கின்றன. 30-திருமண்ணிப்படிக்கரை என்ற இலுப்பைப்பட்டினின்று தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (குற்றாலம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 35-திருப்பந்தணை நல்லூர் இருக்கின்றது. 33-திருநாரையூரிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 10-மைலில் 1-சிதம்பரம் இருக்கின்றது. 34-திருக்கடம்பூரிலிருந்து தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் வாணகுரன்பூரித் தலமாகிய கங்கைகொண்ட சோளேசரம், இருக்கின்றது.

## ஆனைதாண்டபுரம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 19-திருநின்றியூரும், இதன் வடக்கே மட்சாலைமார்க்கமாய் 3-மைலிலுள்ள கதிராமங்கலத்திலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் அரைமைலில் 17-திருக்கண்ணார்கோயில் என்ற குறுமாணக்குடியு மிருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே மட்சாலைமார்க்கமாய் ஒரு மைலில் 21 திருநீடூரும், இதினின்று மேற்கே மட்சாலைமார்க்கமாய் 3-மைலில் 22-திரு அன்னியூர் என்ற பொன்னூரும், இதிலிருந்து வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலிருந்து பாண்டவய்யன் வாய்க்காலுக்கு மேல்பக்கமாய் அரை மைலில் 26-திருக்கொறுக்கையும் இருக்கின்றன.

குறிப்பு:— 17-திருக்கண்ணூர் கோயில் என்ற குறுமாணக்குடியிலிருந்து வடக்கே கிராமங்கலம் மட்சாலைமார்க்கமாய் மூன்றரை மைலில் 16-வைத்தீசுவரன் கோயில் இருக்கின்றது. 26-திருக்கொறுக்கையிலிருந்து தெற்கே கரைமார்க்கமாய் 3-மைலில் (குற்றாலம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 25-கீழைத் திருமணஞ்சேரி யிருக்கின்றது.Xஆனை தாண்டாபுரம் என்ற கஞ்சாறூர், மானக்கஞ்சாற நாயனார் திருவவதாரம் செய்ததலம்.

## மாயூரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 2-மைலில் 102-திருமயிலாடுதுறை என்ற மாயூரமும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் 103 திருவிளநகரும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலிலிருந்து தெற்கே ஒரு மைலில் 104-திருப்பறியலூர் என்ற பறசலூரும், இதினின்று வடக்கே சாலையை அடைந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 105-திருச்செம்பொன் பள்ளி என்ற செம்பனூர் கோயிலும், இதிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 106-திருநனிபள்ளி என்ற புன்செயும், இதினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 18-திருக்கடைமுடி என்ற கீழையூரும் இருக்கின்றன. 106-திருநனிபள்ளி என்ற புன்செயினின்று வடகிழக்கே மட்சாலைமார்க்கமாய் 6-மைலில் 11 திருவெண்காடும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 12-திருக்காட்டுப்பள்ளியு மிருக்கின்றன. 11-திருவெண் காட்டிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 8-கலிக்காமூர் என்ற அன்னப்பன்பேட்டை இருக்கின்றது. 11-திருவெண் காட்டிலிருந்து தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 9-திருச்சாய்க்காடு என்ற சாயாவனமும், இதினின்று கிழக்கே கால் மைலில் 10-திருப்பல்லவனீச்சரம் என்ற காவிரிப்பூம் பட்டினமும், இதினின்று தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 107-திரு

x ஆனைதாண்டவபுரம் வேறு கஞ்சாறூர் வேறு.
கஞ்சாறூ கஞ்சாநகரம் என வழங்கும்.

வலம்புரம் என்ற மேலப் பெரும்பள்ளமும், இதினின்று தென் மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 108-திருத்தலைச் சங்காடும், இதினின்று தெற்கே (110-திருக்கடவூருக் குப்போகிற மட்சாலையில்) 2-வது மைலிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில 109-திரு ஆக்கூரும், மேற்கண்ட சாலையில் 109-திரு ஆக்கூர்ச்சாலைச் சந்திப்பி லிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 110-திருக்கடவூரும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 111-திருக்கடவூர் மயானமும் இருக்கின்றன.

குறிப்பு:— 105-திருச்செம்பொன் பள்ளி என்ற செம்பனார் கோயிலிலிருந்து தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 109-திரு ஆக்கூர் இருக்கின்றது. 106-திருநனிபள்ளி என்ற புன்செயிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 108-திருத்தலைச்சங்காடு இருக்கின்றது. 11-திருவெண் காட்டிலிருந்து வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் 14-சீகாழி யிருக்கின்றது. 8-திருக்கலிக்காமூர் என்ற அன்னப்பன் பேட்டையிலிருந்து, வடக்கே கரை மார்க்கமாய் 5-மைலில் சீகாழி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள (மத்தியில் உப்பனாறு குறுக்கிடுவதால் மார்க்கம் சங்கடம்) 7-திருமுல்லைவாயிலும் தெற்கே கரைமார்க்கமாய் 3-மைலில் 10-திருப்பல்லவனீச்சுரம் என்ற காவிரிப்பூம்பட்டினமு மிருக்கின்றன. 110-திருக்கடவூரிலிருந்து, தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் (திருவிசைப்பா பெற்றதும் வைப்புத்தலமுமாகிய) திருவிடைக்கழியும், தென்கிழக்கே புரையாறு மட்சாலை மார்க்கமாய் 10-மைலில் (புரையாறு ரோட் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 112-திரு வேட்டகுடியும் இருக்கின்றன.

மாயூரம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனிலிருந்து, தஞ்சாவூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும் உள்ள ரயில்வே.

## குற்றாலம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் முக்கால் மைலில் 100-திருத்துருத்தி என்ற குற்றாலமும், இதினின்று வடக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலிலுள்ள (காவேரிக்கு வடக்கே) மஞ்சிவாய்க்கால் வடகரை வழியாய்க் கிழக்கே மாயூரத்திற்குச்செல்லும் மட்சாலையில் ஒரு மைலில் 23-திருவேள்விக்குடியும், இதினின்று வடக்கே கரைமார்க்கமாய் ஒன்றரை மைலில் 24-திரு எதிர்கொள்பாடி என்ற மேலைத்திருமணஞ்சேரியும், இதினின்று கிழக்கே கால் மைலில் 25-திருமணஞ்சேரி என்ற கீழத்திருமணஞ்சேரியும் இருக்கின்றன. மேற்கண்ட மஞ்சிவாய்க்கால் பாலத்தினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் காலரை மைலில் 35-திருப்பந்தணை நல்லூர் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே க்ஷேத்திரபாலபுரம் மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 101-திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர் இருக்கின்றது.

குறிப்பு:— 25-திருமணஞ்சேரி என்ற கீழத்திருமணஞ்சேரியிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் 8-மைலில் (ஆனைதாண்டாபுரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 26-திருக்கொறுக்கை இருக்கின்றது. 35-திருப்பந்தணை நல்லூரிலிருந்து, தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 7-மைலில் (ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 39-திருப்பனந்தாளும் வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (வைத்தீசுவரன்கோயில் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 30-திருமண்ணிப்படிக்கரை என்ற இலுப்பைப்பட்டு மிருக்கின்றன. 35-திருப்பந்தணை நல்லூரிலிருந்து வடக்கே மட்சாலை மார்க்கமாய் 5-மைலில் கொள்ளிடம் அணைக்கரை இருக்கின்றது. இதினின்று பட்டணம் மட்சாலை மார்க்கமாய் 6-மைலிலிருந்து வடமேற்கே இரண்டு மைலில் (வாணாசூரன் பூசித்த தலமும் திருவிசைப்பா பெற்ற தலமுமாகிய) கங்கைகொண்ட சோளேசர மிருக்கின்றது. இதினின்று, வடக்கே ஜயங்கொண்ட சோழபுரம் மட்சாலை மார்க்கமாய் 26-மைலில் (சிதம்பரம் ஸ்டேஷன் மார்க்கத்திலு

ள்ள)218-திருஎருக்கத்தம்புலியூரும் கிழக்கே மட்டசாலை மார்க்கமாய் 6-மைலில் (வைத்தீசுவரன்கோயில் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 34-திருக்கடம்பூரும் இருக்கின்றன.

## நாரசிங்கம் பேட்டை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே மட்டசாலை மார்க்கமாய் ஒரு மைலில் 99-திருவாவடு துறையும், இதினின்று தெற்கே மட்டசாலையும் கரைமார்க்கமுமாய் ஒன்றரை மைலில் 98-திருக்கோழம்பமும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து வடக்கே ஒருமைலில் (ஆற்றுக்குப்பரிசு) காவேரி வடகரையில் 36-திருக்கஞ்சனூரும், இதினின்று கிழக்கே மட்டசாலை மார்க்கமாய் 2-மைலில் 37-திருக்கோடிகாவு மிருக்கின்றன.

குறிப்பு:—98-திருக்கோழம்பத்திலிருந்து தெற்கே புதார் மார்க்கமாய் 4 மைலில் (ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 97-திருநல்லம் என்ற கோனேரி ராஜபுரம் இருக்கின்றது. 36-திருக்கஞ்சனூரிலிருந்து மேற்கே ஒருமைலில் (ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 38-திருமங்கலக்குடி இருக்கின்றது.

## ஆடுதுறை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே மட்டசாலை மார்க்கமாய் முக்கால் மைலில் 94-திருத்தென் குரங்காடு துறை என்ற ஆடுதுறையும், இதன் வடகிழக்கே மட்டசாலை மார்க்கமாய் 2-மைலில் காவேரிவடகரையில் 38-திருமங்கலக்குடியும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து வடக்கே மட்டசாலைமார்க்கமாய் 6-மைலில் 39-திருப்பனந்தாளும், இதினின்று மேற்கே மட்டசாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 40-திருவாப்பாடியும், இதினின்று தெற்கே மட்டசாலைமார்க்கமாய் அரை மைலில் 41-திருச்சேய்ஞலூரும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து தெற்கே மட்டசாலை மார்க்கமாய் 2-மைலில் 95-திருநீலக்குடி என்ற தென்னலக்குடியும், இதினின்று கிழக்கே மட்டசாலை மார்க்கமாய் 2-மைலிலுள்ள [illegible] மார்க்க

மாய்த் தெற்கே கரைவழியாய் ஒருமைலில் 96/1-லைகளும், இதினின்று தென்மேற்கே அரைக்கால்மைலில் 96/2-மாடக்கோயிலு மிருக்கின்றன. மேற்கண்ட பழியஞ்சிய நல்லூரிலிருந்து (கிழக்கே அரைமைலிலுள்ள புதூர் மார்க்கமாய் நாட்டார் வாய்க்கால் கடந்து) தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 97-திருநல்லம் என்ற கோனேரிராஜபுரமும், இதினின்று தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் இரண்டரை மைலில் 126-திருக்கருவிலியும் இருக்கின்றன.

குறிப்பு:— 97-திருநல்லம் என்ற கோனேரிராஜபுரத்திலிருந்து, தென்கிழக்கே கரைமார்க்கமாய் 2-மைலிலும் 126-திருக்கருவிலியிலிருந்து வடகிழக்கே கரைமார்க்கமாய் இரண்டரை மைலிலும் (பூந்தோட்டம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 125-திருவன்னியூர் என்ற அன்னூர் இருக்கின்றது. மேற்கண்ட புதூரிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் ஒருமைலில் (நாரசிங்கம்பேட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 98-திருக்கோழம்ப மிருக்கின்றது. 95-திருநீலக்குடி என்ற தென்னலகுடியிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் 5-மைலில் (கும்பகோணம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 92-திருநாகேச்சுரம் இருக்கின்றது. 40-திருவாப்பாடியிலிருந்து தென்மேற்கே வேப்பத்தூர் மட்சாலை மார்க்கமாய் 7 மைலில் 93-திருவிடைமருதூர் இருக்கின்றது. 38-திருமங்கலக்குடியிலிருந்து கிழக்கே ஒருமைலில் (நாரசிங்கம் பேட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 36-திருக்கஞ்சனூர் இருக்கின்றது. 126-திருக்கருவிலியிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (கும்பகோணம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ளதும், 128-திருநறையூர்ச் சித்தீச்சரத்திற்கும் 127-திருப்பேணு பெருந்துறைக்கும் மத்தியிலுள்ளதுமாகிய) நாச்சியார்கோயில் இருக்கின்றது.

## திருவிடை மருதூர் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடக்கே அரை மைலில் 93-திருவிடை மருதூரும், இதினின்று வடமேற்கே வேப்பத்தூர்

மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் 43-திருவியலூர் என்ற திருவிசநல்லூரும், இதினின்று வடக்கே கரைமார்க்கமாய் ஒரு மைலில் 42—திருந்துதேவன் குடியுமிருக்கின்றன.

குறிப்பு:—கும்பகோணத்திலிருந்து, மாயூரத்திற்குப்போகிறகாவேரி வடகரை மட்சாலை மார்க்கமாய் நாலரைமைலில் (திருவிடை மருதூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 43-திருவியலூர் என்ற திருவிசநல்லூர் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 7 மைலில் ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 40-திருவாசப்பாடி இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒருமைலில் (வாணாசூரன் பூசித்த தலமாகிய) திருபுவனமும், இதினின்று தெற்கே மட்சாலை மார்க்கமாய் 2 மைலில் (கும்பகோணம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 92-திருநாகேச்சரமும் இருக்கின்றன.

## கும்பகோணம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே கற்சாலை மார்க்கமாய் அரை மைலில் மகாமகக்குளம் வடகரையில் 91-திருக்குடந்தைக்காரோணம் என்ற ஸ்ரீ காசி விசுவநாதன் கோயிலும், இதினின்று மேற்கே கால் மைலில் 90-திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் என்ற (மடந்தையார்கோயில்) ஸ்ரீநாகேசுவரன் கோயிலும், இதினின்று மேற்கே கால்மைலில் 89-திருக்குடமூக்கு என்ற ஸ்ரீகும்பேசுவரன் கோயிலும், இதன் கிழக்கே கற்சாலைமார்க்கமாய் கால் மைலில் சோமேசம் என்ற ஸ்ரீசோமநாதன் கோயில் வைப்புத்தலமும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே காவேரி வடகரை கற்சாலை மார்க்கமாய் 3-மைலில் 44-திருக்கொட்டையூரும், இதினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 45 திரு இன்னம்பர் என்ற இன்னம்பூரும், இதினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 2 மைலில் 46-திருப்புறம்பயமும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்க

மாய் ஒரு மைலில் 47-திருவிஜய மங்கையும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 48-திருவை காவூரும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 92-திருநாகேசுரம் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்துதெற்கே நீடாமங்கலம் கற்சாலை மார்க்கமாய் 2-மைலில் 131-திருக்கலய நல்லூர் என்ற சாக்கோட்டையும், இதினின்று தெற்கே ஷை சாலையில் ஒரு மைலில் 132 - திருக்கருக்குடி என்ற மருதா நல்லூரும், இதினின்று தெற்கே ஷை கற்சாலை மார்க்கத்தில் 2-மைலிலுள்ள வலங்கைமானிலிருந்து கிழக்கே(157-திருக்குடவாயிலுக்குப் போகிற மட்சாலையில்) ஒன்றரை மைலில் 160 திருக்கவோய்க்கரைப்புத்தூர் என்ற ஆண்டாங்கோயிலும் இருக்கின்றன. 131-திருக்கலயநல்லூர் என்ற சாகேோட்டையிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் இரண்டரை மைலில் 130-திருச்சிவபுரம் இருக்கின்றது. 131-திருக்கலயநல்லூர் என்ற சாக்கோட்டையிலிருந்து தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் காலரை மைலில் 129-திருஅரிசிற்கரைப்புத்தூர் என்ற அழகாப்புத்தூரும், இதினின்று தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 2 மைலில் 128-திருநறையூர்ச் சித்தீச்சுரமும், இதினின்று வடகிழக்கே கற்சாலை மார்க்கமாய் 2-ல்மைலில் 127-திருப்பேணு பெருந்துறையு மிருக்கின்றன.

குறிப்பு:—கும்பகோணத்திலிருந்து, மாயூரம் மட்சாலையில் காலரை மைலில் (திருவிடைமருதூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 43-திருவியலூர் இருக்கின்றது. 92-திருநாகேசுரத்திலிருந்து வடகிழக்கே (வாணுசூரன் பூசித்ததலம்) திருபுவனம் மட்சாலை மார்க்கமாய் 3 மைலில் 93-திருவிடைமருதூர் இருக்கின்றது.(128-திருநறையூர்ச் சித்தீச்சுரத்திலிருந்து 127-திருப்பேணு பெருந்துறைக்குப்போகிற மார்க்கத்தின் மத்தியிலுள்ள) நாச்சியார் கோயிலிலிருந்து, தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 3-மைலில் (குடாச்சேரி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 158-திருச்சேறை இருக்கின்றது. நாச்சியார் கோயிலிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைல

வில்(ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 126-திருக்கடவிலியிருக்கின்றது. 132-திருக்கருக்குடியிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் எறிபத்தநாயனார் இருந்த தலமாகிய எயினனூர் இருக்கின்றது. 160-திருக்குடவாய்க் கரைப்புத்தூர் என்ற அண்டாளன்கோயிலிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் (கூராட்சேரி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 157-திருக்குடவாயில்இருக்கின்றது. சுந்தரப்பெருமாள்கோயில் ஸ்டேஷனிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் (ஆறுகளுக்குப்பரிசு) ஒரு மைலிலுள்ள அண்டக்குடியிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் 2-மைலில் 48-திருவைகாவூர் இருக்கின்றது. அண்டக்குடியினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலிலும், 44-திருக்கொட்டையூரிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலிலும், 88-திருவலஞ்சுழியினின்று வடக்கே கரைமார்க்கமாய் (ஆறுகளுக்குப்பரிசு) ஒரு மைலிலும், 4-வது படைவீடாகிய திருவேரகம் என்ற சுவாமிமலை இருக்கிறது.

## தாரேச்சுரம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 85-திருச்சத்திமுற்றமும், இதன் தெற்கே ஒரு பர்லாங்கில் 86-திருப்பட்டீச்சரமும், இதினின்று கிழக்கே ஒரு மைலில் மட்சாலை மார்க்கமாய் வைப்புத்தலமாகிய முழையூருக்குச்சமீபமாய் 87/2 வடதளியும், இதன் தென்கிழக்கே ஒருமைலில் ஆற்றின் தென்கரையில் (ஆற்றுக்குப்பரிசு) 87/1 திருப்பழையாறையும் இருக்கின்றன.

குறிப்பு:—தாராசுரம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே கால்மைலில் வாணாசுரன் பூசித்த தலமாகிய தாரேச்சுரம் இருக்கின்றது. 86-திருப்பட்டீச்சரத்திற்கு தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் (ஆறுகளுக்குப்பரிசு) அரைமைலில் (பசுபதிகோயில் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 84-திருநல்லூர் இருக்கின்றது. 86-திருப்பட்டீச்சரத்திற்கு மேற்கே ஒரு மைலில் [illegible] மேற்றளி வைப்புத்தலமிருக்கின்றது.

## சுந்தரப் பெருமாள் கோயில் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 88-திருவலஞ்சுழி இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 83-திருநல்லூர் இருக்கின்றது.

குறிப்பு :—83-திருநல்லூரிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 82-திருப்பாலைத்துறை இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் (ஆறுகளுக்குப் பரிசு) ஒரு மைலிலுள்ள அண்டக்குடியிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் 2-மைலில் (கும்பகோணம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 48-திருவைகாவூரும், அண்டக்குடியினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலிலும், 88-திருவலஞ்சுழியினின்று வடக்கே கரைமார்க்கமாய் (ஆறுகளுக்குப் பரிசு) ஒரு மைலிலும், முருகர் 4-வது படைவீடாகிய திருவேரகம் என்ற சுவாமிமலை இருக்கின்றது.

## பாபவிநாசம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 82-திருப்பாலைத்துறை இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தெற்கே சாலியமங்கலம் கற்சாலையில் 4-மைலில் 81-திருக்கருகாவூரும், இதினின்று வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் 84-திருவாவூரும் இருக்கின்றன.

குறிப்பு:—82-திருப்பாலைத் துறையிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் (சுந்தரப்பெருமாள்கோயில் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 83-திருநல்லூர் இருக்கின்றது. 84-திருவாவூரிலிருந்து வடகிழக்கே நாலரை மைலில் (தாரேச்சுரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 86-திருப்பட்டீச்சுரம் இருக்கின்றது. 81-திருக்கருகாவூரிலிருந்து தெற்கே 4-மைலில் சாலியமங்கலம் ஸ்டேஷன் மார்க்கத்தில் சொல்லியிருக்கும் களஞ்சேரிப்பாலம் வின்னாறு வடக்கரை மார்க்கமாய் கிழக்கே 4-மைலில் 163-திரு அவளிவணல்லூர் இருக்கின்றது.

## அய்யம் பேட்டை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே கற்சாலை மார்க்கமாய் முக்கால் மைலில் 80-திருச்சக்கராப்பள்ளியும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 79-திருப்புள்ள மங்கையும் (பசுபதி கோயிலுக்கு மிகச்சமீபம்) இருக்கின்றன. 80-திருச்சக்கராப்பள்ளியிலிருந்து வடக்கே கரைமார்க்கமாய் 3-மைலில் (ஆற்றுக்குப்பரிசு) 49-திருவடகுரங்காடுதுறை இருக்கின்றது.

குறிப்பு:—49-திருவடகுரங்காடு துறையிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் 3 மைலில் (தஞ்சாவூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 50-திருப்பழனம் இருக்கின்றது. 79-திருப்புள்ள மங்கையிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் (தஞ்சாவூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 76-திருச்சோற்றுத்துறை இருக்கின்றது.

## திட்டை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே முக்கால் மைலில் 78-திருத்தென்குடித்திட்டை என்ற திட்டை இருக்கின்றது

## தஞ்சாவூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் 6-மைலில் 75-திருக்கண்டியூரும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 2 மைலில் 74-திருப்பூந்துருத்தியும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 73-திருவாலம் பொழிலும் இருக்கின்றன. 75-திருக்கண்டியூரினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 77-திருவேதிகுடியும்; இதினின்று வடக்கே கரைமார்க்கமாய் 2-மைலில் 76-திருச்சோற்றுத்துறையும் இருக்கின்றன. 75-திருக்கண்டியூரிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 51-திருவையாறும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் இரண்டரை மைலில் 50-திருப்பழனமும் இருக்

கின்றன. 51-திருவையாற்றினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 1 மைலில் 52-திருநெய்த்தானமும், இதினின்று வடக்கே கரைமார்க்கமாய் ஒன்றரை மைலிலும் 51-திருவையாற்றிலிருந்து வடமேற்கே கரைமார்க்கமாய் ஒன்றரை மைலிலும் 53-திருப்பெரும்புலியூரும், இதினின்று மேற்கே கரைமார்க்கமாய் 2 மைலில் கொள்ளிடம் மேல்கரையில் (ஆற்றுக்குப்பரிசு) 54-திருமழபாடியும், இதினின்று வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 10-மைலில் 55-திருப்பழுவூரும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே உரைத்த நாட்டுச்சத்திரம் மட்சாலை மார்க்கத்தில் 8-மைலிலிருந்து உழுவூருக்குக் கீழ்பக்கமாய் அரை மைலில் 164-திருப்பருதி நியமம் என்ற பருதியப்பார் கோயில் இருக்கின்றது.

குறிப்பு :—ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலை மார்க்கமாய் அரை மைலில் செருத்துணை நாயனூர் இருந்த தலமும் வைப்புத்தலமும் திருவிசைப்பாபெற்றதலமுமாகிய தஞ்சை ராஜராஜேசுவரமும், இதினின்று வடகிழக்கே கற்சாலை மார்க்கமாய் ஒன்றரைமைலில் வைப்புத்தலமாகிய கருந்திட்டைக் குடியுமிருக்கின்றன. 55-திருப்பழுவூரினின்று தெற்கே திருமானூர் கொள்ளிடம் பரிசுத்துறை மட்சாலை மார்க்கமாய் 13-மைலில் 55-திருவையாறு இருக்கின்றது. 50-திருப்பழனத்திலிருந்து, கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் (அய்யம்பேட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 49-திருவடகுரங்காடு துறையும், தெற்கே ஒருமைலில் கரைமார்க்கத்தில் (ஆற்றுக்குப்பரிசு) 76-திருச்சோற்றுத் துறையும், வடக்கே கரைமார்க்கமாய் ஒரு மைலில் அப்பூதிநாயனூர் இருந்ததும் வைப்புத்தலமுமாகிய திங்களூரும் இருக்கின்றன. 76-திருச்சோற்றுத்துறையினின்று, மேற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 75-திருக்கண்டியூரும் கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் (அய்யம்பேட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 79-திருப்புள்ள மங்கையு மிருக்கின்றன. 74-திருப்பூந் துருத்தியினின்று வடக்கே கரைமார்க்கமாய் ஒன்றரை மைலில்(ஆற்றுக்குப்பரிசு) 52-திருநெய்த்தான

மிருக்கின்றது. 164-திருப்பருதியமம் என்ற பருதியப்பர் கோயிலிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் சாலிய மங்கலம் ஸ்டேஷனிருக்கின்றது.

——:o:——

தஞ்சாவூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், திருச்சிராப்பள்ளி ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும் உள்ள ரயில்வே.

## பூதலூர் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் 5-மைலில் 72-திருக்காட்டுப் பள்ளியும், இதினின்று வடக்கே விஷ்ணும் பேட்டை மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 56-திருக்கானூரும் இருக்கின்றன. 72-திருக்காட்டுப் பள்ளியிலிருந்து மேற்கே காவிரி வடகரை மட்சாலை மார்க்கமாய் 5-மைலிலுள்ள கோவிலடியினின்று வடக்கே 2-மைலில் கொள்ளிடம் வடகரையில் (கொள்ளிடத்திற்குப் பரிசு) 57-திரு அன்பிலாலந்துறை இருக்கின்றது.

குறிப்பு:—57-திரு அன்பிலாலந் துறையினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (திருச்சிராப்பள்ளிக் கோட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 58-திருமாந்துறையிருக்கின்றது,

## திருஎறும்பியூர் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலை மார்க்கமாய் அரை மைலில் 70-திருவெறும்பியூரும் இதினின்று வடக்கே கற்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலிலுள்ள உத்தமசேரிப்பாலத்தினின்று வடக்கே அரை மைலில்-59-திருப்பாற்றுறையும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ரயில்வேக்குத் தென் புறத்தில் மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் 71-திருநெடுங்களம் என்ற திருநட்டாங்குள மிருக்கின்றது.

குறிப்பு:—59-திருப்பாற் றுறையினின்று வடக்கே மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் (கொள்ளிடத்திற்குப்பரிசு

திருச்சிராப்பள்ளிக் கோட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 58-திருமாந்துறை யிருக்கின்றது. 59-திருப்பாற்றுறையினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 5-மைலில் (திருச்சிராப்பள்ளிக் கோட்டை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 60-திருவானைக்காவிருக்கின்றது.

## திருச்சிராப்பள்ளி ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே ஒன்றரை மைலில் 67-திருக்கற்குடி என்ற உய்யக் கொண்டான் மலையிருக்கின்றது.

——:o:——

திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், ஈரோட் ஜங்ஷன் (சேர்கை) ஸ்டேஷனுக்கு முள்ள ரெயில்வே.

## திருச்சிராப்பள்ளிக் கோட்டை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கிழக்கே அரை மைலில் 69-திருச்சிராப்பள்ளி மலையும், இதினின்று மேற்கே கற்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 68-திருமூக்கிச்சுரம் என்ற உறையூரும் இருக்கின்றன. 69-திருச்சிராப்பள்ளி மலையிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் 3-மைலில் 60-திருவானைக்காவும், இதினின்று வடகிழக்கே லாலுகுடி மட்சாலை மார்க்கமாய் 10-மைலில் 58-திருமாந்துறையும் இருக்கின்றன 60-திருவானைக் காவினின்று வடமேற்கே கொள்ளிடம் வடக்கரை பிச்சாண்டார்கோயில் மட்சாலை மார்க்கமாய் 8-மைலில் 62-திருப்பாச்சிலாச்சிராமம்என்ற திருவாசிஇருக்கின்றது. 60-திருவானைக் காவினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 7-மைலிலுள்ள மண்ணச்ச நல்லூரினின்று மேற்கே ஒன்றரைமைலில் 61-திருப்பைஞ்ஞீலி இருக்கின்றது.

குறிப்பு:—60-திருவானைக் காவினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 5-மைலில் (திருவெறும்பியூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 59-திருப்பாற்றுறை யிருக்கின்றது. 58-திரு

மாந் துறையிலிருந்து, கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (பூதலூர்ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 57-திருஅன்பிலாலந் துறையும் வடக்கே கரை மார்க்கமாய் 2-மைலில் ஆருயனாயனார் இருந்ததலமாகிய மங்கலவூர் என்ற திருமங்கலமும் தெற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் (மத்தியில் கொள்ளிடத்திற்குப் பரிசு) திருவெறும்பியூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 59-திருப்பாற்றுறையு மிருக்கின்றன. 61-திருப்பைஞ்ஞீலியிலிருந்து தென்கிழக்கே கரை மார்க்கமாய் 6-மைலில் 62-திருப்பாச்சிலாச்சிராமம் என்ற திருவாசி யிருக்கின்றது.

## எழுமனூர் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே மட்சாலைமார்க்கமாய் ஒன்றரை மைலில் அகண்டகாவேரித் துறைக்குச் சமீபமாய் 66-திருப்பராய்த்துறை இருக்கின்றது.

## குழித்தலை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 65-திருக்கடம்பந்துறை என்ற கடம்பர் கோயில் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் ஆறரை மைலில் 64-திருவாட் போக்கி என்ற இரத்தினகிரிமலை இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து வடக்கே அகண்ட காவேரி வடகரையில் (காவிரிக்குப்பரிசு) 2-மைலிலுள்ள முசிலியிலிருந்து மேற்கே கற்சாலை மார்க்க) மாய் 3-மைலில் 63-திரு ஈங்கோய் மலை இருக்கின்றது.

———:0:———

மாயூரம் ஜங்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், பேரளம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கு முள்ள ரெயில்வே.

## மங்க நல்லூர் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே அரை மைலில் திருவழுவூர் வீரட்டம் இருக்கின்றது.

## பேரளம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷன.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 119-திருமீயச்சூரும், ஷை ஆலயத்தின் வடக்கு ஆல

ரணத்தில் 120-திருமீயச்சூரிளங்கோயிலும், இதினின்றுமேற்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 122-திருப்பாம்புரமும், இதினின்று தென்மேற்கே கரை மார்க்கமாய் 2-மைலில் 123-திருச்சிறு குடியும் இருக்கின்றன.

குறிப்பு:—123-திருச்சிறுகுடியிலிருந்து தென்மேற்கே கரைமார்க்கமாய் 2-மைலில் (பூந்தோட்டம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 124-திருவீழிமிழலை இருக்கின்றது. 119-திருமீயச்சூரிலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் 7-மைலில் (பூந்தோட்டம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 121-திலதைப்பதி யிருக்கின்றது.

——:o:——

பேரளம் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், திருவாரூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும் உள்ளரையில்வே.

## பூந்தோட்டம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் ஆற்றின் தென்கரையில் 121-திலதைப்பதியும், இதினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் 124-திருவீழி மிழலையும், இதினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 125-திருவன்னியூர் என்ற அன்னூரும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 118-திரு அம்பர் மாகாளமும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் அரை மைலில் 117-திரு அம்பர் பெருந்திருக் கோயிலு மிருக்கின்றன.

குறிப்பு:—124-திருவீழி மிழலையிலிருந்து வடகிழக்கே கரை மார்க்கமாய் 2-மைலில் (பேரளம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 123-திருச்சிறு குடியிருக்கின்றது. 125-திருவன்னியூர் என்ற அன்னூரிலிருந்து வடமேற்கே கரைமார்க்கமாய் 2-மைலில் (ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 97-திருநல்லம் என்ற கோனேரி ராஜபுரமும், ஷை திருவன்னியூர் என்ற அன்னூரிலிருந்து தென்மேற்கே கரைமார்க்கமாய் இரண்டரை மைலில் (ஆடுதுறை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 126-திருக்கருவிலியு மிருக்கின்றன. 117-திருவம்பர் பெருந்திருக்கோயிலினின்று தெற்கே கரைமார்க்கமாய் 3-மைலில் நன்னிலம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 138-திருப்புகலூர் இருக்கின்றது. 121-திலதைப் பதியினின்று வடக்கே மட்சாலை

மார்க்கமாய் 2-மைலில் (பேரளம்ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 119-திருமீயச்சூர் இருக்கின்றது.

## நன்னிலம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே கரை மார்க்கமாய் அரைமைலில் 136-திருப்பனையூர் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து மேற்கே கற்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் ஆற்றுக்குத் தென் கரையில் 135-திருக்கொண்டீச் சுரமும், இதிலிருந்து கற்சாலை மார்க்கமாய் மேற்கே ஒன்றரை மைலில் ஆற்றுக்குத் தென் கரையில் 134-திருநன்னிலத்துப் பெருங்கோயிலும், இதினின்று தென் மேற்கே மாப்பிள்ளைக் குப்பம் மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 133-திருவாஞ்சியமும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கேமட்சாலை மார்க்கமாய் 4-மைலில் 138-திருப்புகலூரும், டை ஆலயத்தின் வடக்கு ஆவரணத்தில் 139-திருப்புகலூர் வர்த்தமானீச் சுரமும், இதினின்று தெற்கே மட்சாலை மார்க்கமாய் ஒருமைலில் (திருக்கண்ணபுரம் கீழ வீதியில்) 140-திரு இராமநதீச் சுரமும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 2-மைலில் 142-திருச்செங்காட்டங் குடியும், இதினின்று வடகிழக்கே கரை மார்க்கமாய் 2-மைலிலும் 138-திருப்புகலூரிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலிலும் 143-திருமருகலும், இதினின்று வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் (ஆற்றுக்குப்பிசு) ஒருமைலில் 144-திருச்சாத்த மங்கையென்ற செய்யாத்த மங்கையு மிருக்கின்றன.

குறிப்பு:—139-திருப்புக லூரிலிருந்து வடக்கே கரை மார்க்கமாய் 3 மைலில் (பூந்தோட்டம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 117-திருஅம்பர் பெருந்திருக் கோயில் இருக்கின்றது. 144-திருச்சாத்தமங்கை என்ற செய்யாத்த மங்கையிலிருந்து வடகிழக்கே 5-மைலில் 115-திருநள்ளாறு இருக்கின்றது. 133-திருவாஞ்சியத்தினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 6-மைலில் (கொரடாச்சேரி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 157-திருக்கூடலையாற்றூ ரிருக்கின்றது.

## வெட்டாறு ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே ஒரு மைலில் 149-திருப்பள்ளியின் முக்கூடல் என்ற அரிக்கரியான் பள்ளி இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் 137-திருவிற்குடியும், இதினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 141-திருப்பயற்றூர் என்ற திருப்பயற்றங்குடியு மிருக்கின்றன.

குறிப்பு:—149-திருப்பள்ளியின் முக்கூடல் என்ற அரிக்கரியான் பள்ளியிலிருந்து தென்மேற்கே 2-மைலில் 151-திருவாரூர் இருக்கின்றது.

## திருவாரூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்துவடமேற்கே கற்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 151-திருவாரூர் மூலட்டானமும், ஷை ஆலயத்தின் உள் ஆவரணத்தின் தென் கிழக்கு மூலையில் 150-திருவாரூர் அரநெறியும், ஷை தலத்தின் கீழவீதியில் 152-திருப்பரவையுண் மண்டளி என்ற தூவாயனார் கோயிலும், 151-திருவாரூர் மூலட்டானத்தினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 153-திருவிளமரும் இருக்கின்றன.

குறிப்பு:—151-திருவாரூர் மூலட்டானத்தினின்று வடகிழக்கே 2-மைலில் (வெட்டாறு ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 149-திருப்பள்ளியின் முக்கூடல் என்ற அரிக்கரியான் பள்ளி இருக்கின்றது. 151-திருவாரூரினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 7-மைலில் (குழிக்கரை ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 154-திருக்கரவீரம என்ற கரையபுர மிருக்கின்றது.



திருவாரூர் ஜங்க்ஷன் (சேர்க்கை) ஸ்டேஷனுக்கும், பட்டுக்கோட்டை ஸ்டேஷனுக்கும் உள்ளரயில்வே.

## திருநாட்டியத்தான்குடி ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே முக்கால் மைலில் மட்சாலை மார்க்கமாய் 181-திருநாட்டியத்தான் குடியிருக்கின்

றது. ஸ்டேஷனிலிருந்து தென் மேற்கே 3-மைலில் மட்சாலை மார்க்கமாய் 177-திருப்பேரெயில் என்ற வங்காரம் பேரையூர் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 2-மைலில் திருவாரூரிலிருந்து திருத்தருப்பூண்டிக்குப் போகிற ரஸ்தாவில் சந்திக்கு மிடத்திற்கு வடபுறத்தில் குன்னூரும் தென் புறத்தில் புன்னவாசலு மிருக்கின்றன. இந்தக் குன்னூரிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமா யிரண்டரை மைலிலுள்ள ஆதமங்கலத்தினின்று,வடக்கே அரைமைலில் 183-திருக்கன்றாப்பூரும் தெற்கேஅரைமைலில் 184-திருவலி வலமும் வடகிழக்கே திருவிசைப்பா பெற்ற தலமாகிய திருச்சாட்டியத்தான் குடியும் இருக்கின்றன. ஷை புன்ன வாசலிலிருந்து தெற்கே கற்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 182-திருக்காறாயில் இருக்கின்றது.

குறிப்பு:—182-திருக்காறாயிலி னின்று தெற்கே கற்சாலை மார்க்கமாய் 3 மைலில் (திருநெல்லிக்கா ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 185-திருக்கைச்சின மிருக்கின்றது. மேற்கண்ட ஆதமங்கலத்திலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் (கீழ்வேளூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 148-திருத்தேவூர் இருக்கின்றது.

## திருநெல்லிக்கா ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே கால் மைலில் 180-திருநெல்லிக்காவும், இதினின்று தென்மேற்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 179-திருத்தெங்கூரும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலைமார்க்கமாய் 2-மைலில் 185-திருக்கைச்சினமும், இதினின்று கிழக்கே மட்சாலைமார்க்கமாய் 5-மைலில் 186-திருக்கோளிலி என்ற திருக்குவளையும், இதினின்று தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் 187-திருத்தென்திருவாய்மூரும் இருக்கின்றன. (186-திருக்கோளிலி என்ற திருக்குவளைக்கும் 187-திருத்தென்திருவாய் மூருக்கும் மத்தியில் எட்டுகுடி என்ற சுப்பிரமணிய க்ஷேத்திரம் ஒன்று இருக்கிறது.) இதினின்று மேற்

கே மட்சாலை மார்க்கமாய் ஒன்றரை மைலில் 169-திருச்சிற்றேமம் என்ற சிற்றும்பூர் இருக்கின்றது.

குறிப்பு :—185- திருக்கைச்சினத்தினின்று வடக்கே கற்சாலை மார்க்கமாய் 3-மைலில் (திருநாட்டியத்தான் குடி ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 182-திருக்காராயிலிருக்கின்றது. 169-திருச்சிற்றேமம் என்ற சிற்றும்பூரிலிருந்து தெற்கே அரை மைலிலுள்ள அரிச்சந்திரநதித் தென்கரை மட்சாலை வழியாய் மேற்கே 4 மைலில் பொன்னிரை ஸ்டேஷன் இருக்கின்றது.

## பொன்னிரை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து மேற்கே மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் அரிச்சந்திரநதி வடகரையில் 178-திருக்கொள்ளிக்காடும், இதினின்று ஷை ஆற்றின் தென் கரை மட்சாலை வழியாய் மேற்கே 5-மைலில் 175-திருவண்டுதுறையு மிருக்கின்றன.

குறிப்பு:—ஸ்டேஷனிலிருந்து கிழக்கே அரிச்சந்திரநதித் தென்கரை மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலிலிருந்து வடக்கே அரை மைலில் ஆற்றின் வடகரையில் (திருநெல்லிக்கா ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 169-திருச்சிற்றேமம் என்ற சிற்றும்பூர் இருக்கின்றது. 175-திருவண்டுதுறையிலிருந்து வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 5-மைலில் கொரடாச்சேரி ஸ்டேஷனிருக்கின்றது.

## திருத்தருப்பூண்டி ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் 2-மைலில் 173-திருத்தண்டலை நீணெறி என்ற தண்டலைச்சேரியும், இதன் கீழ்பக்கத்தில் அரிவாட்டாய நாயனார் இருந்த தலமாகிய கணமங்கலமு மிருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து கிழக்கே மட்சாலை மார்க்கமாய் (நடுவில் 10-வது மைலில் தங்கக் கூடிய இடம் மேலமருதூர்) 23-மைலில் 188-திருமறைக்காடு என்ற வேதாரணியமும், இதினின்று தெற்கே

கோடிக்கரைக்குப் போகிற மட்சாலை மார்க்கத்தில் இரண்டரை மைலில் 189-திரு அகத்தியான் பள்ளியும், இதினின்று தெற்கே மட்சாலைமார்க்கமாய் 7-மைலில் 190-திருக்கோடிக் குழகர் என்ற கோடிக்கரையும் இருக்கின்றன. ஸ்டேஷனிலிருந்து மன்னார் குடிக்குப் போகிற மட்சாலையில் 7-வது மைலில் உள்ள திருப்புத்தூர் எல்லையில் முள்ளியாற்று மதகிலிருந்துதெற்கே முத்துப் பேட்டைக்குப் போகிற தீவட்டிக்கரைமட்சாலை மார்க்கத்தில் 3-மைலில் 168-திருக்களரும், மேற்கண்ட திருப்புத்தூரிலிருந்து மேற்கே மன்னார்குடிக்குப் போகிற மட்சாலையில் 2-வது மைலில் 174-திருக்கோட்டூருமிருக்கின்றன.

குறிப்பு :—174-திருக்கோட்டூரிலிருந்து வடமேற்கே (மன்னார்குடி மட்சாலை மார்க்கமாய்) 11-மைலில் (நீடாமங்கலம்ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 167-திருப்பாதாளீச்சரம் என்ற பாம்பணி யிருக்கின்றது. நாகபட்டணத்திலிருந்துதோணி மார்க்கமாய் 188-வேதாரணியத்திற்குப் போகலாம்.

## பாண்டி ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து தெற்கே போகிற மட்சாலை, 4-வது மைலில் முத்துப்பேட்டையி லிருந்து வேதாரணியத்திற்குப் போகிற மட்சாலையில் சந்திக்கிறது. சந்திப்பினின்று மேற்கே கால் மைலில் 171-திருஇடும்பாவனமும், சந்திப்பினின்று கிழக்கே அரை மைலில் 172-திருக்கடிக்குளம் என்ற கற்பக நாதர் குளமு மிருக்கின்றன.

குறிப்பு :—திருவிடும்பாவனத்தினின்று மேற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் விஷ்ணு க்ஷேத்திரமாகிய தில்லைவிளாகம்ஸ்தலமும், இதினின்று வடமேற்கே மட்சாலை மார்க்கமாய் 3-மைலில் தில்லை விளாகம் ஸ்டேஷனும் இருக்கின்றன.

## முத்துப்பேட்டை ஸ்டேஷன்

ஸ்டேஷனிலிருந்து வடக்கே ஒரு மைலில் மட்சாலை மார்க்கமாய் 170-திரு உசாத்தானம் என்ற கோயிலூரிருக்கின்றது.

லை மார்க்கமாய் 3-மைலிலுள்ள வரிச்சிக்குடியினின்று கிழக்கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 112-திருவேட்ட குடியு மிருக்கின்றன.

குறிப்பு :—112-திருவேட்டகுடியினின்று வடமேற்கே புரையாறு மார்க்கமாய் 10-மைலில் மாயூரம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 110-திருக்கடவூர் இருக்கின்றது. ஸ்டேஷ னிலிருந்து தென்மேற்கே காலைக்கால் மார்க்கமாய் 2-மை லில் திருநள்ளாறு ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள 114-திருத் தருமபுரம் இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தெற்கே அ ரை மைலில் காரைக்கால் அம்மையார் திருவவதாரஞ்செய்த ஸ்தலமாகிய காரைக்கால் இருக்கின்றது.

---

தஞ்சாவூர் ஜங்க்ஷன் (சேர்க்கை)ஸ்டேஷனுக்கும் நாக பட்டணம் ஸ்டேஷனுக்கும் உள்ள ரெயில்வே.

## சாலிய மங்கலம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து கற்சாலை மார்க்கமாய் வடக்கே இர ண்டரை மைலில் விண்ணாற்றின் களஞ்சேரிப்பாலமிருக்கின் றது. இதினின்று வடகரை மட்சாலை மார்க்கமாய் கிழக்கே 4 மைலில் 163-திரு அவளிவணல்லூரும், இதினின்று கிழக் கே மட்சாலை மார்க்கமாய் ஒரு மைலில் 162-திரு அரதைப் பெரும்பாழி என்ற அரித்துவாரமங்கலமு மிருக்கின்றன.

குறிப்பு:—களஞ்சேரிப் பாலத்தினின்று வடக்கே கற் சாலை மார்க்கமாய் 4-மைலில் (பாபவிநாசம் ஸ்டேஷன் மார்க் கத்திலுள்ள) 81-திருக்கருகாவூர் இருக்கின்றது. ஸ்டேஷனி லிருந்து தென்மேற்கே 8-மைலில் மட்சாலை மார்க்கமாய்(தஞ் சாவூர் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள)164-திருப்பருதி நியமம் என்ற பருதியப்பர் கோயிலிருக்கின்றது. 163-திருஅவளிவ ணல்லூரிலிருந்து தெற்கே கரைமார்க்கமாய் மூன்றரை மை லில் (மத்தியில் விண்ணாற்றுக்குப பாிச) அம்மாள்பேட்டை

ஸ்டேஷனிலிருக்கிறது. 162-திரு அரதைப் பெரும்பாழி என்ற அரித்துவாரமங்கலத்திலிருந்து தெற்கே மட்சாலை மார்க்கமாய் 4-மைலில் (நீடாமங்கலம் ஸ்டேஷன்மார்க்கத்திலுள்ள 161-திரு இரும் பூளை என்ற ஆலங்குடியும், தெற்கே கரை மார்க்கமாய் (ஆற்றுக்குப் பரிசு) 3-மைலில் 165-திருவெண்ணி என்ற கோயில் வெண்ணியு மிருக்கின்றன.

## அம்மாள் பேட்டை ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் 165-திருவெண்ணி என்ற கோயில்வெண்ணி யிருக்கின்றது.

குறிப்பு:—165-கோயில் வெண்ணியினின்று தென்கிழக்கே மட்சாலை மார்க்கமாய் மூன்றரை மைலில் நீடாமங்கலம் ஸ்டேஷனிருக்கின்றது. ஷை கோயில் வெண்ணியினின்று வடக்கே கரை மார்க்கமாய் (ஆற்றுக்குப்பரிசு) 3-மைலில் (சாலிய மங்கலம் ஸ்டேஷன் மார்க்கத்திலுள்ள) 162-திரு அரதைப்பெரும்பாழி யென்ற அரித்துவாரமங்கல மிருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து வடக்கே மூன்றரை மைலில் (மத்தியில் வெண்ணாற்றுக்குப் பரிசு) 163-திரு அவளிவணல்லூர் இருக்கின்றது.

## நீடாமங்கலம் ஸ்டேஷன்.

ஸ்டேஷனிலிருந்து வடக்கே கும்பகோணத்திற்குப் போகிற சற்சாலை மார்க்கத்தில் 4-மைலில் 161-திரு இரும்பூளை என்ற ஆலங்குடி இருக்கின்றது. ஸ்டேஷனிலிருந்து தெற்கே மன்னார்குடிக்குப் போகிற சற்சாலையில் 2-மைலிலிருந்து (பாமணி யாற்றின்) மேல் பக்கமாய் அரை மைலில் 166-திருப்பூவனூரும், இதினின்று ஷை சற்சாலை மார்க்கமாய் தெற்கே 9-மைலில் இருந்து பாமணி யாற்றின் வடகரை கட்டளைக்கரை மார்க்கமாய்க் கிழக்கே ஒன்றரை மைலில் 167-திருப்பாதாளீச்சரம் என்ற பாமணியு மிருக்கின்றன.

